# சிவபோகசாரமும் :: :: சொக்கநாத வெண்பாவும்

ஆவணிமூல விழா மலர்

துன்முகி, ஆவணி 29ஆம் நாள்

*Book Presented by:*
Dr. T. P. MEENAKSHISUNDARAN,
VICE-CHANCELLOR,
MADURAI UNIVERSITY,
MADURAI.

13—9—1956

His Holiness Guru Gnanasambanda
Paramacharia Swamigal
Founder of Dharmapuram Adhinam.

தருமபுர ஆதீன குருமுதல்வர்
ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

धर्मपुर आधीन मठ के आदिगुरु
श्रीलश्री गुरुज्ञान संबन्ध परमाचार्य स्वामीजी

வெளியீடு 373

உ

குருபாதம்

தருமபுர ஆதீன ஸ்தாபகர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

அருளிச்செய்த

# சிவபோகசாரமும் சோக்கநாத வெண்பாவும்

ஹிந்தி ஆங்கில மொழிபெயர்ப்புடனும்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் சரித்திரப் பட விளக்கத்துடனும்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
25ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள்

திருவுள்ளப்பாங்கின்படி வெளியிடப்பெற்றன

தருமபுர ஆதீனம்

1956

உ

குருபாதம்

# முன்னுரை

அண்ணல் ஆலவாய் நண்ணி னுன்றனை
எண்ணி யேதொழத் திண்ணம் இன்பமே. —சம்பந்தர்.

பாரத நாட்டின் மிகப் பழமையான சமயங்களுள் மணி முடியாகத் திகழ்வது சைவசித்தாந்தம். வேதாகமங்களை அடிப் படையாகக்கொண்ட இதன் கொள்கைகள் அன்று முதல் இன்றளவும் வளம்பெற்று மக்களிடையே பரவிவந்துள்ளன. வேதம் பொதுநெறியை உணர்த்துவது. சிவாகமம் சைவநெறி யைச் சிறப்பாக உணர்த்துவது. இவை வடமொழியிலுள்ளன. சமயாசாரியர்கள் அருளிய தேவார திருவாசகங்கள் தோத்திர வடிவில் சித்தாந்த சாத்திரத்தையுணர்த்தி வேதங்களுக்கு இணையாக விளங்குவன. மெய்கண்டதேவர் முதலிய சந்தானு சாரியர்கள் அருளிய சித்தாந்த சாத்திரங்கள் பதினுன்கும் சாத்திர வடிவில் தோத்திரத்தையுணர்த்தி ஆகமங்களுக்கு இணையாக விளங்குவன.

இத்தகைய சாத்திர பரம்பரையில் சிவம்பெருக்கத் தோன்றிய ஞான தான வள்ளல் ஸ்ரீ குருஞானசம்பந்தர், தம் ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சோக்கலிங்கப்பெருமான்மீது தோத்திரவடிவில் சோக்கநாத வெண்பா முதலியவற்றையும் தம் ஞானுசாரியரான ஸ்ரீ கமலை ஞானப்பிரகாசர்மீது சாத்திர வடிவிலும் தோத்திர வடிவிலும் சிவபோகசாரம் முதலான நூல்களையும் அருளியுள்ளார். இவ்வரிய நூல்கள் சைவ சித்தாந்தக் கருத்துக்களை எளிய நடையில் ஐயந்திரிபற விளக்க வல்லனவாய் அமைந்துள்ளன.

இவையனைத்தும், சென்னைத் தமிழ்க் கலைக் களஞ்சியத் துணை ஆசிரியர் வித்துவான், திரு. ப. மு. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் எம் ஏ., எல். டி., யின் சிறப்பான ஆங்கில மொழிபெயர்ப்புடன் ஆதீனப் பதிப்புகளாகப் பல முறை வெளிவந்துள்ளன. திரு. பிள்ளையவர்கள் இம்மொழிபெயர்ப் பின் மூலம் சைவசித்தாந்தத்திற்குச் செய்துள்ள பெருந் தொண்டிற்குச் சைவ உலகம் என்றும் கடமைப் பட்டுள்ளது. இந்நூலுக்கு அணியாக, 'சைவசித்தாந்த விளக்கம்' என்பது பற்றி, ஆங்கிலத்தில் சுருக்கமாகவும் விளக்கமாகவும் எழுதி யுதவிய புகழ் உடல் பெற்ற சீகாழி, திரு. எஸ். சதாசிவ முதலியார் அவர்கள், ஆன்றோரால் போற்றத்தக்க பணி யாற்றியவர்கள். இவை ஆங்கிலமொழி தெரிந்த அறிஞர் களுக்குப் பெரிதும் பயன்தருவனவாக இருப்பதைத் திருவுளங் கொண்ட தருமபுர ஆதீனம் 25 ஆவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள், தம் ஞானாசாரியர் அருளிய சிவபோக சாரத்தையும் சொக்கநாத வெண்பாவையும் ஹிந்தி மொழியில் வெளியிட்டால் இந்தியா முழுவதிலுமுள்ள மக்களுக்குப் பெரிதும் பயன் தரும் என்று கருதி, ஹிந்தியில் மொழி பெயர்க்கக் கருணை பாலித்தார்கள். அவர்களது அரு ளாணையின் வண்ணம் இவ்விரு நூல்களையும் ஹிந்தியில் இனிய எளிய நடையில் மூலத்திற்கேற்பச் சிறந்த முறையில் மொழிபெயர்த்துக் கொடுத்தவர், 'கலைமகள்' 'மஞ்சரி' மூலமாகவும் நூல்கள் வாயிலாகவும் தமிழ்நாட்டிற்கு நன்கு அறிமுகமான பன்மொழிச் செல்வர், திரு, கா. ஸ்ரீநிவாசா சாரியார் ஆவர். இவர் இலக்கியக் கலைகளோடு சாத்திரக் கலைகளிலும் வல்லவர். இவர் சித்தாந்த சாத்திரத்தில் எந் நாளும் ஈடுபட்டு மேன்மேலும் தொண்டாற்ற ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் திருவருள் புரிவாராக.

குறித்தகாலத்தில் இவ்வரிய நூலைத் தமிழிலும் ஆங்கி லத்திலும் அச்சியற்றிக்கொடுத்த தியாகராயநகர் ''எவர்ரேடி'

அச்சகத்தாருக்கும், ஹிந்தியில் அச்சியற்றிக் கொடுத்த இராயப்பேட்டை "ஸ்ரீவத்ஸா" அச்சகத்தாருக்கும், ஸ்ரீ குரு ஞானசம்பந்தர் வரலாற்றுப் படங்களைப் பதிவு செய்ததோடு, அனைத்தையும் தொகுத்துக் கட்டிடம் செய்துகொடுத்த தருமபுர ஆதீனம் " ஞானசம்பந்தம் " அச்சகத்தாருக்கும் குருமூர்த்தி களின் ஆசி என்றும் துணை நிற்பதாக.

இந்நூல், ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் அன்பருக்கு எளிவந்த திருநாளான ஆவணி மூலத்தன்று ஹிந்தி ஆங்கில மொழிபெயர்ப்புடனும், ஸ்ரீ குருஞானசம்பந்தர் வரலாற்று விளக்கப் படங்களுடனும், இந்திய நாட்டு மக்களும் உலக மக்களும் பயன்பெறுமாறு வெளிவருகின்றது.

அன்பர்கள் இதனைப் பெற்றுப் பயனடைவார்களாக.

தருமபுர ஆதீன
மடாலய தேவாலய
சமயப் பிரசார நிலையம்.
சென்னை-17,
13—9—'56.

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின்
உத்திரவுப்படி,

சோமசுந்தரத் தம்பிரான்

உ

குருபாதம்

---

# சைவ சித்தாந்த விளக்கம்

இந்துக்களின் மிகப் பழமையான தூய நூல்கள் வேதங்களும் ஆகமங்களுமாம். இவை யிரண்டையும் அடிப்படையாகக் கொண்டது சைவ சித்தாந்தம். கடவுளே வெளியிட்டவையாதலால் வேதாகமங்கள் மிகச் சிறந்த பிரமாணமாகக் கொள்ளப்பெறுகின்றன. பிரம்ம சூத்திர உரைகாரர்களுள் மிகப் பெரியவரும் மிகப் பழமை யானவருமாக விளங்குபவர் நீலகண்ட சிவாசாரியர். அவர், வேதங்களுக்கும் ஆகமங்களுக்குமிடையே தாம் வேற்றுமை காணவில்லை என்று கூறியுள்ளார்; சைவ சித்தாந்த முறை யில் தமது பாஷ்யத்தை விளக்குவதற்கு, வேத மந்திரங்களை மிகுதியாக மேற்கோள் காட்டியிருக்கிறார். அதன் பின்னர் சித்தாந்தக் கொள்கையைச் சார்ந்தவர்களான அப்பைய தீட்சிதரும், அரதத்த சிவாசாரியரும், சிவஞான முனிவரும் இயற்றிய விரிவான நூல்களில், வேதங்களும் ஆகமங்களும் ஒன்றோடொன்று இயைபுள்ளவை என்பதையும், ஒற்றுமை வாய்ந்தவை என்பதையும் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். சைவ சித்தாந்தக் கொள்கைக்குக் கருவூலமான ஆகமங் கள், வேதங்களுக்குப் பேருரைகளாகவே கொள்ளப்பெறு கின்றன. சைவ சமயத்தை விளக்கும் சிறப்பான நூல் களாகவும் அவை மதிக்கப்பெறுகின்றன. அவை கர்ம காண் டம், ஞான காண்டம் என இரு பிரிவுகளாக உள்ளன. இவற்றுள் ஞான காண்டம், சைவ சித்தாந்தக் கொள்கை களை மிக விரிவாகவும் விளக்கமாகவும் கூறுகின்றது. இவற்

றைத்தவிர, எல்லோரும் எளிதில் அறியக்கூடிய கதைகளாக வும் நிகழ்ச்சிகளாகவும் விளங்கும் புராணங்களிலும், இதி காசங்களிலும்கூட, சித்தாந்தக் கருத்துக்களை அங்கங்கே காணலாம்.

இந்த வேதாகமங்கள் யாவும் வடமொழியில் உள் ளவை, ஆயினும் தமிழிலும் இவற்றைப்போலவே தூய்மை யும், முதன்மையும், பெருமையும் வாய்ந்த மறைகள் விளங்கு கின்றன. சைவ சமயாசாரியர்களான சம்பந்தர், அப்பர், சுந்தரர் என்னும் மூவரின் தெய்விகப் பாடல்களான தேவா ரமும், மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்தருளிய திருவாசக மும் அரிய தமிழ் மறைகளாம்; மெய்கண்டதேவர் முதலிய சந்தாணசாரியர்கள் அருளிய பதினன்கு சித்தாந்த நூல்கள் தமிழாகமங்களாகக் கொள்ளப்பெறுகின்றன. வேதங்கள், முக்கியமான சமயக் கருத்துக்களை மக்களுக்குப் பொதுவாக அறிவிக்கத் தோன்றியவை; தமிழ் மறைகளும் அத்தகை யனவேயாம். ஆகமங்களோ, சமயப் பண்பாட்டில் ஊறி முன்னேற்றமடைந்த அறிவாளிகளுக்குச் சிறப்பாக முடிந்த முடிபான உண்மைகளை முற்றும் தத்துவோபதேசமாகக் கூறுவனவாம். தமிழ் மொழியிலுள்ள பதினன்கு சித்தாந்த நூல்களும் இத்தகைய செயலையே மேற்கொண்டுள்ளன.

## சைவ சித்தாந்தம்

ஏனைய சமயங்களைப் போலவே சைவ சித்தாந்தமும் ஆன்மிகத் துறையில் மேன்மேலும் வளர்ச்சிபெற்று வந் துள்ளது. சைவ சித்தாந்த பரம்பரை வாழையடி வாழை யாக வந்துள்ள வரலாற்றை நாம் தக்கபடி அறிந்துகொண் டோமானல், இந்தச் சமயம் ஏனைய சமயங்களைவிடப் பழ மையானது என்பது நன்கு விளங்கும். அப்படிக் கொள் ளாதவர்களும், இது தொன்மைச் சமயங்களுள் ஒன்று என்பதை மறுக்க இயலாது ஒப்புக்கொள்வர் என்பது

திண்ணம். மகா சம்ஹாரத்துக்குப் பிறகு முதன் முதலில் வேதங்களும் ஆகமங்களும் பிரணவத்திலிருந்து தோன்றின என்பர். அவை, முதலில் நாதமாகவும், பின்பு பிந்துவாக வும், பிறகு அட்சரமாகவும் தோன்றின. சிவபெருமா னுடைய நான்கு பக்கத் திருமுகங்களிலிருந்து அட்சர வடிவில் வெளிவந்த சொற்களும் தொடர்களுமே நால் வேதங்களாம்; ஊர்த்துவ முகத்திலிருந்து வெளிவந்தவை ஆகமங்களாம். இறைவன் வேதங்களை அனந்ததேவர் வாயிலாகப் பிரமனுக்கு அருளிச்செய்தார். ஆகமங்களைப் பத்து மகேசுவரர்களுக்கும் பதினெட்டு உருத்திரர்களுக்கும் அருளிச் செய்தார். இப்படியாக இருபத்தெட்டு ஆகமங் கள் தோன்றின. இவை அனந்ததேவருக்கு உபதேசிக்கப் பெற்றன. பிறகு அவர் ஸ்ரீகண்டருக்கும், ஸ்ரீகண்டர் நந்தி தேவருக்கும் உபதேசிக்க இவை பரம்பரையாக வந்தன. நந்தி தேவருக்கு ஆகமங்களில் சில ஐயங்கள் எழுந்தன. எழவே, அவர் ஸ்ரீகண்டரை அவற்றைத் தெளிவிக்கும்படி வேண்டிக் கொண்டார். அப்பொழுது ஸ்ரீகண்டர், ரௌரவ ஆகமத்தின் ஒரு பகுதியான "சிவஞான போதத்தை" நந்தி தேவருக்கு உபதேசித்தார். இந்தச் சிவஞான போதத்தை, நந்திதேவர் தமது சீடரான சனத்குமாரருக்கும், சனத்குமாரர் சத்தியஞான தரிசனிக்கும், சத்தியஞான தரி சனி பரஞ்சோதி முனிவருக்கும், பரஞ்சோதி முனிவர் மெய்கண்ட தேவருக்கும் வழி வழியாக உபதேசித்தார்கள்.

மெய்கண்ட தேவர் சிவஞான போதத்தைத் தமிழில் பன்னிரண்டு சூத்திரங்களாக *மொழி பெயர்த்துத் தம் பிரதம சீடரான அருணந்தி சிவாசாரியருக்கு உபதேசித்

* பரஞ்சோதி முனிவரிடம் உபதேசம்பெற்ற மெய்கண்ட தேவர், சிவஞான போதத்தைத் தமிழிலேயே மூலநூலாக அருளிச்செய்தார் என்று கூறுவாரும் உளர்.

தார். அருணந்தி சிவாசாரியாரிடமிருந்து மறைஞான சம்பந்த சிவாசாரியருக்கும், மறைஞான சம்பந்த சிவாசாரியாரிடமிருந்து உமாபதி சிவாசாரியருக்கும் இது பரம்பரையாக வந்தது. மெய்கண்டதேவர் தொடங்கி உமாபதி சிவாசாரியார் ஈருகவுள்ள இந்த ஆசாரியர்கள் ‘சந்தான குரவர்’ எனப் பெறுவர்.

## அடிப்படைக் கொள்கைகள்

சைவ சித்தாந்தம், முடிந்த முடிபாக முப்பொருள் அல்லது மூன்று உண்மைகளை உரைக்கின்றது. அவை யாவன:—பதி அல்லது இறைவன், பசு அல்லது உயிர், பாசம் அல்லது உயிர்களைப் பிணைக்கும் கட்டு. இவை மூன்றும் நித்தியமானவை; இவற்றுக்கு ஆதியும் இல்லை, அந்தமும் இல்லை. பதி அல்லது இறைவன் இயல்பாகவே தெய்விக வடிவிலே இருப்பவன்; அவன் எல்லாம் வல்லவன், கருணைக்கடல், எங்கும் நிறைந்துள்ளவன், நடுநிலை வாய்ந்தவன், பூரணன், அன்புமயமானவன்; மாறாத ஆனந்த மயமானவன்; பாசத்துக்கு அப்பாற்பட்டவன்; தன்னை எய்திய உயிர்கள் மீண்டும் திரும்பாதபடி பரிபூரண ஆனந்தத்தையளிக்கும் ஊற்றுக்கண்ணாக விளங்குபவன்.

உயிர்கள் எண்ணற்றவை, அவை படிகம் போன்ற தன்மை வாய்ந்தவை. எந்தப் பொருளுக்கு முன்பு நாம் படிகத்தை வைகின்ருேமோ அதனையே படிகம் பிரதிபலித்துக் காட்டும். உயிர்கள் தெய்விகச் சக்தியைப் பெறத்தக்கன. இறைவனருளால் கிடைக்கும் பேரின்பத்தை நுகரவல்லவை. ஆனால் அவை பாசத்தால் கட்டுண்டு துன்பத்தில் மூழ்கியுள்ளன.

பாசம் அல்லது உயிர்களைப் பிணிக்கும் கட்டு மூன்று வகையானது. அவையாவன — ஆணவம், மாயை, கன்மம்.

இவற்றை மும்மலம் என்றும் கூறுவர். ஆணவம் உயிருக்கு அறியாமையையும் செருக்கையும் ஊட்டுகிறது. இதுதான் அகங்காரம் என்பது. மாயை பௌதிக உலகத்துக்குக் காரணமாக நின்று, பதியின் துணைகொண்டு உயிரை அதனுடைய இயக்கமற்ற தன்மையையும் செயலற்ற தன்மையையும் நீக்கி உயர்த்தவல்லது. கன்மம் என்பது உயிர்கள் செய்த நன்மையும் தீமையுமான செயல்களின் குவியல். உயிரின் பிறப்புக்கும் இறப்புக்கும் கன்மமே காரணம். உயிர்கள் பாசத்தால் கட்டுண்டிருக்கும் நிலை நிரந்தரமானது ; ஆயினும் இந்தக் கட்டு ஆன்மாக்களின் வகைக்கேற்ப மாறுபடும். அதாவது ஒரு மல முள்ள உயிர்கள் விஞ்ஞான கலர் என்றும், இரு மலமுள்ள உயிர்கள் பிரளயா கலர் என்றும், மும் மலமுமுள்ள உயிர்கள் சகலர் என்றும் கூறப்பெறும். பசுவும் பாசமும் ஒன்றைவிட்டு ஒன்றைப் பிரித்துக் காண முடியாதவாறு நெருங்கி இணைந்துள்ளன. ஆயினும் அவற்றின் இணைப்பு நீங்காதது அல்ல. பசு அல்லது உயிர், இறைவனருளால் பாசபந்தத்திலிருந்து விடுபடும். பாசத்தின் சக்தி ஒடுங்கியிருக்கும் நிலையில் பசு அல்லது உயிர் இறைவனைத் தெளிவாகக் கண்டு, பேரின்பத்தை நுகர அவனோடு சேர்ந்துவிடும். கேவல அவத்தையில் உயிர் பாசத்தோடு நீங்காது பொருந்தியிருந்ததுபோலவே, பாசங்களினின்று முற்றும் விடுபட்ட சுத்த அவத்தையில் உயிர் இறைவனோடு நீங்காது ஒன்றி விடும். இந்த உறவே அத்துவிதம்; அதாவது இரண்டறக் கலத்தலாம்.

## தத்துவங்கள்

சைவ சித்தாந்தத்தை ஆழ்ந்து பயில விரும்புகிறவர்கள் தத்துவங்களைப் பற்றிச் செம்மையாக அறிந்துகொள்ள வேண்டும். இவற்றின் இலக்கணங்களையும் விரிவையும்

தமிழில் 'சட்டஙேகள்' எனப்பெறும் சிறு நூல்களில் கற்றுணரலாம்.

பாரதநாட்டுச் சமயங்களில் பெரும்பாலானவை, இருபத்துநான்கு ஆத்ம தத்துவங்களேப் பற்றிப் பேசுகின்றன. அவையாவன — மண், நீர், தீ, காற்று, வானம் என்ற ஐம்பூதம்; மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகள்; (ஞானேந்திரியங்கள்;) — சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புலன்கள்; (தன் மாத்திரைகள்;) வாக்கு, கால், கை, எருவாய், கருவாய், என்ற ஐந்து கர்மேந்திரியங்கள்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு அந்தக்கரணங்கள் ஆகியனவாம். வித்தியா தத்துவங்கள் ஏழினுள் ஒன்ருன மூலப் பிரகிருதி, இருபத்தைந்தாவது தத்துவமாம். ஆனுல் சைவ சித்தாந்தம் இவற்ருேடு பின்னும் பதினெரு தத்துவங்களேச் சேர்த்துரைக்கின்றது. மேற்கூறிய தத்துவங்கள் இருபத்தைந்தும் புருடதத்துவங்கள். இவற்றை யன்றி, அராகம், காலம், நியதி, கலே, வித்தை, அசுத்தமாயை என்னும் ஆறு வித்தியா தத்துவங்களும்; சுத்தவித்தை, ஈசுவரம், சாதாகியம், பிந்து (சக்தி), நாதம் (சிவம்) என்ற ஐந்து சிவதத்துவங்களும் ஆகப்பதினெரு தத்துவங்களாம். சுத்தவித்தை தொடங்கி நாதம் ஈருக உள்ளவை 'சுத்தமாயை' எனப்பெறும். இதிலிருந்து சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்ற நான்கு வாக்குகள் தோன்றுகின்றன. இவ்வாறு பிருதுவி (மண்) முதல் நாதம் ஈருக உள்ள முப்பத்தாறு தத்துவங்கள், தத்துவாத்துவா என்று கூறப்பெறுகின்றன. இதையன்றி, பின்னும் ஐந்து அத்துவாக்கள் உள்ளன. அவையாவன:— காலாக்கினிபுவனம் முதல் அநாசிரிதபுவனம் ஈருகவுள்ள புவனுத்துவா, அகரம் தொடங்கி 51 எழுத்துகள் அடங்கிய வர்ணுத்துவா, வியோமவியாபி தொடங்கி 81 பதங்கள் கொண்ட பதாத்துவா, பதினெரு மந்திரங்களேக் கொண்ட

மந்திராத்துவா, நிவிர்த்தி தொடங்கிப் பஞ்சகலைகளை விவரிக்கும் கலாத்துவா என்பவை. சுவையான நுண்ணிய இவ் விஷயங்களைப் பற்றிய விரிவை அறிய விரும்புவோர் சிவஞான சுவாமிகளின் 'சித்தாந்தப் பிரகாசிகை'யையும் காசிவாசி செந்திநாத ஐயரின் 'Saiva siddhanta sattva catechism' என்ற ஆங்கில நூலையும் படித்துக் காண்பார்களாக.

## சிவபோக சாரத்தைக் கற்க

சிவபோகசாரத்தைத் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்கு சைவ சித்தாந்தத்தில் சில முக்கியமான விஷயங்களைப்பற்றிய அறிவு இன்றியமையாததாகும். அவையாவன—சித்தாந்தம் என்ருல் வேத ஆகமங்களின் முடிந்த முடிபு. வேதாகமங்களின் சாரமாவது கீழ்க்கண்ட விஷயங்களின் இயல்பைப்பற்றிய விளக்கமாம். அவையாவன—பதி, பசு, பாசம்; ஆணவம், திரோதானம், மாயை, சுத்தமாயை, அசுத்தமாயை என்னும் ஐம்மலங்கள்; சுத்தமாயை, அசுத்த மாயை, பிரகிருதிமாயை இவற்றின் வளர்ச்சி; கன்மமும், சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமியம் என்ற அதன் பாகுபாடுகளும்; தொண்ணூற்ருறு தத்துவங்களின் செயல்கள்; ஆறு அத்துவாக்கள்; ஐந்து கலைகள்; ஆறு ஆதாரங்கள்; மூன்று மண்டலங்கள்; மூன்று முக்கிய அவத்தைகளும் அவற்றின் வெவ்வேறு உட்பிரிவுகளும்; தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்னும் நான்கு மார்க்கங்கள்; சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்கள்; பஞ்சாட்சர இரகசியம், ஐவகையான சுத்தி; சத்திநிபாதத்தின் நான்கு பகுதிகள், வெவ்வேறு தீட்சை வகைகள்; தசகாரியத்தின் வகைகள்; தசகாரியத்துள் மிகவும் முக்கியமான சிவபோகம் ஆகியவையாம். இந் நூலிலுள்ள விஷயம் சிவபோகமாம்.

மேற்கூறியவை அனைத்தையும் கருத்தில் கொண்டு பார்க்கும்பொழுது, மிகவும் தூயதும் முக்கியமுமான விஷய மடங்கியதுமான "சிவ போகசாரம்", சைவ சித்தாந்தத்தில் மறைமுகமாகவுள்ள கருத்துக்களைத் தெளியவைக்கும் சிறந்த நூல் என்ற வகையில் வரவேற்கத்தக்கதாம். பரமனைப் பெறும் பரிபூரண முத்தியின்பமாகிய நிதியை அறியுமாறு சிறந்த சிவஞானியான இந்நூலாசிரியர் **ஸ்ரீ குருஞானசம்பந்தர்** தெளிவாக விளக்கியிருக்கின்றார். மேலும் சைவ சித்தாந் தத்துக்கு ஒளிவிளக்கு என்று கூறத்தக்க அருமை யான கருத்துக்களை எடுத்துக் கூறியிருக்கின்றார். அறிஞர் கள் இந்நூலைப் படித்து சைவசித்தாந்தக் கருத்துக்களை நன்கறிந்து, எல்லையற்ற பேரின்பத்தை நுகர்வார்கள் என்று நம்புகின்றேன்.

*சீகாழி*
**23-4-1931**

**எஸ். சதாசிவ முதலியார்.**

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் தோத்திரம்

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்தி டாமல்

தாரணிஅன் பரையாள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்

காரணியும் நெடியபொழிற் கமலை வேந்தன்
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்

பார்புகழும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

—ஸ்ரீ சம்பந்தசரணாலயர்.

திருச்சிற்றம்பலம்.

நூலாசிரியர்.

# குருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு

செந்தமிழ் வளமும் தென்றலின்பமும் முந்துற நுகர, முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானுல் மன்னர் மன்னனுக மணிமுடி தாங்கிச் சவுந்தர பாண்டியன் எனும்பேர் சார்ந்து ஆளப்பெற்றதும், தமிழ்நயம் தெரிந்து சைவம் காத்த பெரும் புனல் வையைத் திருவளம் பெருக்கும் சிறப்புடையதும் ஆகிய பாண்டிய நாட்டிலே "மின்னுர் தடமதில்சூழ் வில்லி புத்தூர் என்ருெருகால் சொன்னுர் கழற் கமலம் சூடினேம்" என்று தன் பெயர் கூறவே பேரின்பமும், பெறுபயனும், தெய்வத்தன்மையும் ஒருங்கு அளிப்பதாகிய ஸ்ரீவில்லிபுத் தூரிலே, தாளாற்றித்தந்த பொருளெல்லாவற்றினையும் தக்கார்க்கு வேளாண்மை செய்யும் சிறப்பு வாய்ந்ததும், மன்னன் செங்கோலையும், தன் ஏர்க்கோல்வழி நடாத்தும் மாண்பு வாய்ந்ததும், வானம் தந்த மழைப்பயன் கொண்டு வாரிபெருக்கி வளம்பல செய்து தானமும் தவமும் தடை யின்றி நடக்கச்செய்யும் பெருமை சேர்ந்ததுமாகிய கார்காத்த வேளாளர் குடியிலே, "கற்றல் கேட்டலுடையார் பெரியார்" என்னும் ஞானநூற் சொற்ருெடரைப் பெருவரம்பாகக்

கொண்டு, சமயசாத்திர நுணுக்கங்களை நன்கு கற்றுக் கேட்டுத் தெளிந்து நற்றவச் செல்வராய், சிவபூஜை தியானம், சிவாலய வழிபாடு முதலியவைகளைச் செவ்வனே செய்துவருகின்ற **சுப்பிரமணியப்பிள்ளை** என்கிற ஞானச் செல்வர் ஒருவர் இருந்தார். அவருக்குப் பண்டை நற்றவத்தால் இல்லறப் பண்பு எல்லாம் ஒருங்குவாய்ந்த நற்குடிப் பிறந்த **மீனாட்சியம்மை** என்னும் கற்பிற் சிறந்த பொற்புடை நங்கை நல்லூழ்கூட்ட இல்லறத் துணைவி யாயினர்.

இவர்கள் இருவரும் இல்லறத்தையே இம்மை மறுமை இரண்டும் தரும் நல்லறமாக நடத்திவந்தனர். இவர்கள் சிந்தை எப்பொழுதும் சிவத்தினிடமே சேர்ந்திருந்தமையால் இவர்கள் செய்யும் புண்ணியங்கள் யாவுமே சிவபுண்ணியங் களாயின. அத்தவத்தின் மிகுதியால் சிவ ஒளி திகழும் தவநிறை குமரர் அவதரித்தார். பிறந்தநாளோ இறை வனுக்கு உகந்த திருநாளாகிய சோமவாரம். செல்வச் சிறுவரின் முகவொளி பெற்றோர் மனதைக் கவர்ந்ததென் பது ஒரு வியப்பன்று. குழவியைக் காண வந்தவர்களுள் தெய்வவொளி திகழும் சிறுவரென்பார் சிலர். உலகம் உய்யப் பல கலை நிறைந்த பாலரென்பார் சிலர். இங்ஙனம் வருங்கால நிகழ்ச்சியைக் குறிப்பாலுணர்த்தும் திருமேனி யைக் கண்டு பலரும் வியந்து பாராட்டுவாராயினர், கண்டவர் மனதை வசீகரிக்கும் கருணைக் குழந்தையின் பெற்றோர் மனம் பேரின்ப வெள்ளத்து ஆழ்ந்தமையைப்பற்றி அறிவிக்க முடியுமோ ? வளர்ச்சிக் காலத்துத் தளர்நடை நடத்தல் சிறுதேருருட்டல் சிறுபறை கொட்டல் முதலிய பிள்ளைப் பருவ விளையாட்டுக்கள் யாவும் உரியகாலத்தே நிகழ இளமைப் பருவத்தின் ஐந்தாம் பருவத்தை அடைந்தார். பக்குவமறிந்து மார்ச்சார நியாயத்தால் வலியவந்து ஆட் கொள்ளும் பரமாசாரியனைப்போலக் கல்வி ஞானமும்

இவரை வந்து ஈண்டின. இருமொழிப் புலமையும் ஒருசேர எய்தின. உலகத்து வினைவயத்தானெழுந்த பிறப்பொன்று. பண்டை நற்றவத்தால் உலகிற்கு நல்வழி காட்டவந்த பிறப்பு மற்றொன்று. வினைப்பிறப்பு கல்வி ஞானத்தையும்கூட மிகுந்த உழைப்பாலுறும்; உற்றதையும் மறக்கும். அருட்பிறப்பைக் கல்வியும் ஞானமும் தாமே வந்தடைந்து பெருமை எய்தும், இவர்கள் பிறப்போ உய்விக்கவந்த பிறப்பு. ஆதலால் கல்வியிற் சிறந்தோர் களென்பதில் வியப்பொன்றுமில்லை. இவ்வாருக சிவஞானச் செல்வர் பதினும் ஆண்டினை அடைந்தார். தாய்தந்தை யர்களும் கல்வி கேள்வியிற் சிறந்த மகனைத் தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிதாம் என்று எண்ணி எண்ணி மகிழ்ந்திருந்தனர்.

அப்பொழுது தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய **ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை** வழிபடவேண்டும் என்ற பெருவிருப்பம் தாய் தந்தையர்கட்கு உண்டாயது. தமது அரும்பெறற் செல்வரையும் அழைத்துக்கொண்டு மதுரை யம்பதியை அடைந்தனர். புலவர் தலைவராயிருந்து புலவரைப் போற்றிய பெருமானும்-வாதவூரடிகளை வழி யடிமைகொண்ட வள்ளலாய்-வேதத்திற்குப் பொருளருளிய விழுமிய தலைவனும்-முப்பொருளுண்மைகளையும் முத்தி நிலையையும் உணர்த்திய முதல்வனுயுள்ள சோமசுந்தரக் கடவுளையும், தமிழ்நாட்டுத் தனியரசியாய்-கடைக்கண் கொழித்த கருணைப் பெருவெள்ளத்து மூழ்கும் அடியார் பிறவிப்பிணிக்கு மருந்தாய்-மலையத்துவசன் பெற்ற பெரு வாழ்வாயுள்ள மீனுட்சியம்மையாரையும் வணங்கிக்கொண்டு சிலநாள் அங்கு வதிந்தனர். காலந்தவருது வழிபாடுசெய்து வந்தனர், அப்போது கண்ணுதற்பெருமான் கடைக்கண் பெருவெள்ளம் ஞானசம்பந்தர்மீது பாயத் தொடங்கிற்று; சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது. தெய்வக்கலை மேன்

மேலும் விளங்கத் தொடங்கிற்று. அதனால் இல்லறத் தொடர்பு மெல்ல நழுவிவந்தது.

தாய்தந்தையர்களோ இல்லறப்பற்று இழுக்க வில்லி புத்தூர் செல்ல விரைந்தனர். சமய முறைப்படி கோயி லுக்குச் சென்று பொற்றாமரையில் நீராடி விடையேறும் பெருமானிடம் விடைகொண்டனர். வீடு திரும்புகிறவர்கள் செல்வக்குமாரரை—ஞானசம்பந்தரை வீட்டுக்கழைத்தனர். குமாரர் மனமோ நிலைத்த குறிக்கோளில் நிலைத்திருந்தது. தந்தையார் அழைப்பு செவி புகவில்லை. மீட்டும் மீட்டும் வற்புறுத்தி அழைத்தனர். சிவஞானத்தேனரும்பு சிந்தை யாராகிய ஞானசம்பந்தர் "என்னுயிர்த் தந்தையும் தாயும் இவ்வாலயத்தில் இருக்கிறார்களே; இவர்களைவிட்டு எங்ஙனம் நீங்குவேன்; எப்படி வருவேன்; உடற்றந்தை யாகிய உங்களோடு எனக்கு உறவில்லை" என்றுரைத் தனர். இதைக்கேட்ட தாய் தந்தையர்கள் மனங்கலங் கினர். ஞானசம்பந்தர் சாத்திர தோத்திரவாயிலாகப் பலபல சமாதானங்கள் சொல்லித்தேற்ற, ஒருவாறு தேறிச்செல் கிறவர்கள் தமது செல்வர் சிவஞானப் பெரியாராக—சமயம் வளர்க்குந் தலைவராக ஆகக்கூடுமென்ற எண்ணமானது அவருடைய நிகழ்ச்சியாலும் திருவருளாலும் மனத்துள் தோன்ற மட்டற்ற மகிழ்ச்சியோடு இல்லம் அடைந்தனர்.

பின்பு ஞானசம்பந்தர் விதிமுறை வழிபாடாற்றிப் பல நாள் மதுரையில் வசித்துவந்தனர். ஒருநாள் விடியற் காலையில் பொற்றாமரைத்தடத்து நீராடச் சென்றனர். அங்கு திருநீறும் கண்டிகையும் திகழ்தரு மேனியோடு வடக்கு நோக்கியிருந்து சிவலிங்கத் திருமேனியைத் தம்முன் எழுந் தருளப் பண்ணிக்கொண்டு பல அடியார்கள் தன்வசமற்று நாக்குழற, உரை தடுமாற, கண்ணீர் வாரச் சிவபூஜை செய்துகொண்டிருத்தலைக் கண்ணுற்றார். தாமும் அவ்வாறு

சிவபூஜை செய்து சிவாநந்தத்துள் திளைத்திருப்பது எந்நாட் கூடுமோ என்று எண்ணிக்கொண்டே ஒரு விருப்புமின்றி வழிபாடு செய்துவரும் அவர் அன்று சொக்கேசர் திருமுன்பு "தேவரீருடைய அருட்டிருமேனியை வைத்து அருச்சிக்கும் பேறு எனக்கும் இப்பிறவியில் கிட்டுமோ?" என்று வேண்டி நின்றனர். நெடுநேரஞ் சென்ற பிறகு அந்தக் குறை மனத்தோடு வீடுசென்று அன்றிரவு துயில்கொண்டனர். குறைமுடித்தருளும் பெருமானாகிய நிறைசெல்வச் சொக்கர் அவர் கனவில் எழுந்தருளி "ஞானசம்பந்த! நீ விரும்பிய வண்ணம் நாம் சிவலிங்கத் திருமேனிகொண்டு பொற்ரு மரைத் தடாகத்தின் ஈசான மூலையிலே கங்கைக்குள்ளிருக் கிறோம்; காலையில் அங்குச்சென்று மூழ்கி எம்மைப் பூசிப்பாயாக" என்று திருவாய்மலர்ந்தருளினார். ஞானசம் பந்தர் இறைவன் அருட்செயலிருந்தபடி என்னே! எளிவந்த கருணையால் அடியேனையும் ஆட்கொண்டனரே: இதனைக் காட்டிலும் இப்பிறப்பில் எளியேனெய்தும் பேறு வேறுண்டோ என்று எண்ணி எழுந்து ஆனந்தக்கூத்தாடித் தோத்திரித்த வண்ணமே விடியுமளவை எதிர்நோக்கினர். அவர்கள் உள்ளத்தின் விரைவு விடியலை நெடிதாக்கிவிட்ட தாகத் தோன்றிற்று. விடியல் நீள, விழைவு பெருகு கின்றது. விடிந்ததும் நாட்கடன் முடித்து நீராடப் பொற் ருமரைக்குச் சென்று நீராடி இறைவனுணர்த்திய இடத்தில் இறங்கி மூழ்கித் தேடினர். அப்போது இறைவன் சிவலிங்கத் திருமேனிகொண்டு பெட்டகக் கோயிலோடும் இவர் கரத்திலெழுந்தருளினார். உடனே ஞானசம்பந்தர் கரை யேறிப் பெட்டகத்தைத் திறந்து சிவலிங்கத் திருமேனியைக் கண்டு சிந்தை நிறைந்த மகிழ்ச்சிக் கடலிற்றிளைத்து, ஆனந்தக்கூத்தாடி, சந்நிதியை அடைந்து, சொக்கநாதப் பெருமானை வணங்கிக் "**கண்ணுக்கினிய**" என்னும் பாடலை முதன்மையாகக் கொண்டு பதினொரு பாடல்களைக் கொண்ட கலித்துறையை ஆக்கி அருளினார். அதில் ஆன்ம

வியல்பை எடுத்துக்கூறிச் சொக்கநாதப் பெருமானை நோக்கி "நீ பூரணவாரியுள்ளே நண்ணும்படி செய்; நின்னைப் பாடும்படி செய்; நினைந்தேத்திப் பணிந்தெழுந்தே ஆடும்படி செய்; மலமைந்தும் வீடும்படி செய்; என வேண்டுகிறார். மற்றும் "ஏருத விண்ணப்பம் கூறுகின்றேன். அஃதேதெனில்" எனத் தொடங்கிச் சொக்கநாதர் திருச்செவியில் ஏற்றிய வரந்தான் இன்றைக்கும் என்றைக்கும் சொக்கலிங்கத் திருவுருவிடை இறைவன் இருந்து அருள் வழங்கி நிற்கும் அருளாற்றலாகும்.

இவ்வண்ணம் சொக்கநாதப் பெருமானை வழிபட்டு எழுந்தருளியிருக்கின்ற வேளையிலே சிவலிங்கப் பெருமானைப் பூசித்தற்குரிய விதிமுறைகளையும் சிவ ஞானோபதேசத்தையும் ஒரு ஆசாரியன் வாயிலாகவே அடைய வேண்டுமென்று சொக்கநாதர் திருமுன்பு சென்று வேண்டினர். கருத்தறிந்து முடிக்கும் கண்ணுதற் பெருமான் அன்றிரவு வழக்கம்போலக் கனவிற்றோன்றி "ஞானசம்பந்த! நமது உபதேச பரம்பரையில் வந்த கமலை ஞானப்பிரகாசரிடம் நீ விரும்பியவற்றைப் பெற்று பூசித்துவருக" என ஆணைதந்தனர். அவ்வாறே திருவாரூர் ஞானப்பிரகாசர் கனவிலும் தோன்றி "வருகிற சோமவாரத்தன்று உன்னிடம் வருகிற நமது ஞான சம்பந்தனுக்கு விதிப்படி ஞானோபதேசம் செய்து சிவலிங்க பூசையும் எழுந்தருளப்பண்ணிக் கொடுக்க" என்று கட்டளையிட்டனர்.

ஞானசம்பந்தர் விடியலெழுந்து சொக்கலிங்கப் பெருமான் திருவருள் இருந்தபடியே திருவாரூர் செல்லத் தொடங்கி, திங்கட்கிழமை காலை திருவாரூரை யடைந்தனர். கமலாலயம் என இப்போது வழங்கும் தேவதீர்த்தத்தில் நீராடி "இன்றுதானே பெருமான் அருளிய இனிய நாள், குருநாதன் தரிசனம் கிடைக்கும் பெருநாள்" என்று எண்ணிக்

கொண்டே திருக்கோயிலை வலம்வந்தனர். இவ்வாறே சொக்கலிங்கப் பெருமான் ஆணைதாங்கி வரும் அருந் தவச் சீடர் கிடைக்கும் நாள் இதுவே என்று திரு வாரூர்ச் சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்தித் திருமுன் கமலை ஞானப்பிரகாசர் சிவயோகத்தினி தமர்ந்திருந்தனர். அப் போது வலம்வருகின்ற ஞானசம்பந்தர் **ஈனமல இருள் நீக்கும் ஞானபாநு** இவர்தாம் என்பதை அறிந்து காந்தங்கண்ட இரும்புபோல் விரைந்து சென்று திருவடி களில் விழுந்து வணங்கி ஒருபக்கத்தொதுங்கி நின்றார். அப்போது ஞானப்பிரகாச தேசிகர் அபய அத்தங் கொடுத்து தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலே யிருக்கப்பணித்து, திருவருள் நோக்கஞ்செய்து, ஞானதீக்கை புரிந்து பூசையை எழுந்தருளப்பண்ணிக் கொடுத்தனர். ஞான சம்பந்தர் தமது குருநாதர்மேல் "**பண்டாரக்கலித்துறை**" என்னும் ஒரு நூலையியற்றித் தோத்திரித்தனர். பின் தமது ஆன் மார்த்த மூர்த்தியின்மேல் "**சொக்கநாத வெண்பா**" சொல்லித் தோத்திரித்தனர்.

இவ்வாறு குரு வழிபாடும் இறை வழிபாடும் இயற்றிக்கொண்டு திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் போது ஒருநாள் மாலைக்காலத்து, கமலை ஞானப்பிரகாசர் திருக்கோயில் வழிபாட்டிற்காகச் சென்றவர்கள் அர்த்த யாமம் ஆகும்வரையில் சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் சிவயோகத் தமர்ந்திருந்தனர். அர்த்தயாமம் ஆனதும் வீட்டுக்குத் திரும்புகையில் கைவிளக்குக்காரன் தூங்கிவிட்டமையால் ஞானசம்பந்தர் தாமே சென்று கைவிளக்கை எடுத்துக்கொண்டு உடன்வர, குமரகோயில் பின்தெருவிலுள்ள தமது இல்லத்திற்கு எழுந்தருளினர். வீட்டுக்குச் செல்லுகின்ற ஞானப்பிரகாசர் தமது சீடரை நோக்கி "நிற்க" எனப் பணித்துச் சென்றார்கள். 'குரு வாணை நிற்க என்றுதானே' என்று எண்ணிய அவர்கள்

நின்ற இடத்திலேயே சிவயோகத்தமர்ந்து சிவானந்த இன்ப நிலையில் மூழ்கியிருந்தனர். அன்றிரவு பெருமழை பெய்தது. பெய்தும் திருமேனியில் ஒரு துளிகூட விழவில்லை. ஒருகோல் சதுரத்தில் சுற்றிப் பெய்திருந்தது. விடியலில் விழித்து இல்லம் விளக்க வந்த ஞானப் பிரகாசருடைய மனைவியார் கைவிளக்கேந்தி ஞானசம்பந்தர் நிற்பதையும், மழையின் நிலையையும் அறிந்து வியந்து உள்ளே சென்று தம் கணவருக்கு உணர்த்தினர்கள். வெளிப்போந்த ஞானப்பிரகாசர் இவர்களது அதிதீவிர பக்குவ நிலையை அறிந்து "அப்பனே! உன்னால் பல ஆன்மாக்கள் பல்லூழிகாலம் வரை ஈடேறத் திருவருள் துணைநிற்கின்றது. ஆதலால் வடக்கே சென்று உபதேச வாயிலாக உண்மையைப் பரப்புக; சித்தாந்தசைவச் செந் நெறியை நிலைநிறுத்துக" என்று ஆணைதந்தனர். அதனைக் கேட்ட இவர்கள் மனம் பதைத்துத் "தேவரீரைவிட்டு எவ்வாறு பிரிந்திருப்பேன், எருதுக்கும் பொதிக்கும் இச்சை உண்டோ; எனக்கும் உடற்கும் அப்படியே; ஆதலால் பரமாசாரியர் பணித்தபடியே நடக்கக் கடமைப்பட்டவன்" என்று வருந்தி நிற்கின்றபோது, "நமக்கு மிக அணிமையிலுள்ள சித்தி க்ஷேத்திரமாகிய தருமபுரத்தையடைந்து ஆண்டுத்தங்கி அருள் வழங்குக" என்று ஆணைதந்து அனுப்பினர். தெளிவு குருவின் திருவார்த்தையைக் கேட்டலாதலின் ஆசிரியர் ஆணைப்படி தருமபுரம் வந்து அருள் வழங்கி அமர்ந்திருந்தனர். தமது சிவாநுபவங்களை எல்லாம் செறித்துப் பெரும் பொருளடங்கிய சிறு நூலாக—சிந்தை தெளிவிக்கும் தெளிதேனுகை உள்ள **"சிவபோக சாரத்தையும்," "திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவலை யும்"** அருளிச்செய்தனர்.

இவர்கள் இவ்வாறு ஞானபாநுவாய் எழுந்தருளி இருக்குங் காலையில் சிதம்பரத்திலுள்ள கண்கட்டி

மறைஞானபண்டாரம் என்பவர் ஒரு கல்விமாளுக விளங்கி வந்தார். அவர் ஆகமசாத்திரங்களிலும் சைவப்பெருநூல் களிலும் தக்க பயிற்சியும் அநுபவமும் உடையவரா யிருந்தனர். ஆனால் அவருக்குத் திருவருள் விலாசம் பதிய வேண்டிய நிலையில் இருந்தது. அதனால் அவருடைய அநுபவமானது ஆன்மாவிற்கே இயற்கையாக ஆனந்தம் உண்டென்றும், அது மலத்தால் தடைப்பட்டிருக்கிற தென்றும், தடை நீங்க வெளிப்படும் ஆனந்தத்தை ஆன்மா நுகருகிறதென்றும், சிவனை ஒப்ப ஆன்மாவுஞ் சச்சிதானந்த ரூபி என்றும், அதுவே முத்திநிலையென்றும் உணர்ந்து **முத்தி நிலை** என்றதொரு நூலையும் அருளச்செய்தது. மக்கள் பலரும் இக்கொள்கையை இவருடைய கல்வி வல்லமை யாலும் சொல்லுந் திறத்தாலும் பசி நீங்கக் காணும் இன்பம் போல மலம் நீங்கக்காணும் மகிழ்ச்சியென்ற முறைமையின் எளிமையினாலும் கடைப்பிடித்தனர். இதனைத் திருவுளம் பற்றிய இக்குருமூர்த்திகள் மக்கள்மேல்வைத்த பெருங் கருணையினால் ஆன்மாவுக்கு ஆனந்தம் இயற்கையல்ல வென்றும், திருவருட் பதிவால் மலம் நீங்கச் சிவாநந்தத்துத் திளைக்கும் பேறே முத்தி என்றும், ஆன்மாவிற்கு உளதாகும் ஆனந்தம் இறைவனிடத்திலிருந்து பெற்ற பேறே என்றும் முடிந்த முடிபாக இருபத்திரண்டு வெண்பாக்களாலாகிய "**முத்தி நிச்சயம்**" என்னும் அநுபவஞானநூலை ஆக்கி யருளினார்கள்.

இவ்வாறு பலநாள் அரன்பணி அறப்பணி ஆற்றி ஆனந்த பரவசர், சச்சிதானந்தர், மருதூர் ஆபதுத்தாரணர் முதலான சீடர்களுக்குச் சிவஞானோபதேசம் செய்து எழுந்தருளியிருக்குங்காலத்து, சிவயோகசமாதியில் எழுந் தருளத் திருவுளங்கொண்டு தீவிரதரபரிபக்குவராகிய ஆனந்த பரவசரை ஞானபீடத்தில் எழுந்தருளுவித்துத் தாம் விரும்பியவண்ணம் சிவலிங்கத்தினடியில் அமர்ந்தார்கள்.

ஆனந்தபரவசர் கனிந்த கனியாயிருந்ததால் அவர் களும் தமது ஞானமூர்த்தியின் திருக்கோயில் மேல்பால் சிவயோகத்திலமர்ந்தனர். இதனை அடியார்கள் விருப்பப் படித் திருவுளத்தடைத்த குருமூர்த்திகள் அவிச்சின்ன சத்சம்பிரதாயம் உலகில் நீடுவாழ எண்ணி, சிவயோகத்தி னின்றும் வெளிப்போந்து சச்சிதானந்தருக்குச் சிவஞானங் கைவரப்பண்ணி வைகாசி மாதம் அபரபக்க சப்தமி தினத்திலே சிவசமாதி கூடினார்கள்.

இவர்கள் குருவாகிய கமலை ஞானப்பிரகாசரைப் பற்றிய, சதாசிவதேவ மகாராயர் காலத்தில் அவர் பிரதி நிதியாகத் தஞ்சையையாண்ட கிருஷ்ணதேவராயர் பெண் வயிற்றுப் பேரனை கிருஷ்ணமகாராசையன் ஆணைப்படி வெட்டுவித்த கல்வெட்டொன்றில் "சிக்கல் வடகுடி ஓடாச்சேரி முதலிய தேவதானங்களுக்குத் திருவாரூர் ஞானப்பிரகாச பண்டாரத்தை, கணக்கு எழுத்தும், **பரதேசி முத்திரையும்** அடைத்துக் கொள்ளும்படிக்கு உத்தரமளிக் கிறது" எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது. இச்சாசன காலம் கி. பி. 1561. அன்றியும் கமலை ஞானப் பிரகாசரியற்றிய திருமழுவாடிப் புராணத்துச் செய்யுளாகிய இது,

***தழுவிய கலியு கஞ்சேர் சகாத்தமா யிரத்து நானூற்***
***றுழிதரு மெண்பத் தேழாண் டொழிந்தபின் குரோத னுண்டின்***
***மொழிதரு மாசித் திங்கண் முற்பக்க முதனாள் தன்னின்***
***மழுவையம் புராணந் தன்னை வகுத்தனன் தமிழி னாலே.***

சாலிவாகன சகாப்தம் 1488 என்று தெரிவிக்கிறது. இவ் விரு ஆதாரங்களும் ஞானசம்பந்தர் காலம் சுமார் 385 ஆண்டுகட்கு முன்னர் என்று துணிய இடந்தருகின்றன.

இங்ஙனம் திருக்கயிலாய பரம்பரையில் அவிச்சின்ன சத்சம்பிரதாயியாகிய இந்தக் குருமூர்த்திகள் தன்னடைந்

தார்க்கு ஊனுடைப் பிறவிக்கானத்து உழலாது முத்தி நாடெய்த ஓர் ஞானவாரணம் நல்கும் பெருமானுக—ஞான வாரமுத பானமதருந்திக் கருவிகள் கழன்று பரவசமாகிப் பரமானந்தப் பரவையுட் படிந்து பேராவியற்கை பெற்றினி திருப்ப ஆரா இன்பம் அளித்தருள் அண்ணலாகத் திருக் கோயில் கொண்டெழுந்தருளி இருக்கின்ருர்கள் என்பது ஏனைய குருமூர்த்திகளது சமாதித்தானங்கள் போலாது இவர்களுடைய கோயில் **ஸ்ரீ ஞானபுரீசுவரர் ஆலயம்** என்ற திருநாமத்தோடு சகல ஆவரண பரிவாரங்கள்சூழ விளங்கி வருவதாலும், நித்திய பூஜையோடு பிரமோற்சவ பக்ஷோற் சவங்கள் இடையருது நடைபெற்று வருவதாலும் அறியக் கிடக்கின்றது. இது கண்கண்ட தெய்வமாக விளங்குகின்ற ஸ்ரீ குருஞானசம்பந்தருடைய திருக்கோயிற்குள்ள தனி மாண்பாகும்.

௨.

குருபாதம்

திருச்சிற்றம்பலம்

# சற்குரு வணக்கம்

---

கிடந்தாலு ஞானப்ர காசனென் பேன்கிடந் தேளழுந்து
படர்ந்தாலு ஞானப்ர காசனென் பேன்பசி யோடுபிணி
அடர்ந்தாலு ஞானப்ர காசனென் பேன்அந்த அந்தகனுர்
தொடர்ந்தாலு ஞானப்ர காசனென் பேன்பினேச்
சொல்இல்லேயே. 1

வான்பார் கமலேத் திருஞான சம்பந்த மன்னனெங்கோன்
ஊன்பார் உடற்பவ நீக்கிட வோமொழி யோர் வசனந்
தேன்பாகு கற்கண் டிளநீர் வளேமுறி சீனிகன்னல்
ஆன்பா லினுந்தித்தித் தூற்ருய்ப் பெருகல் அதிசயமே. 2

அறியாமை நிற்கும் அதீதத்தி லேசென் றறிவொடுநான்
அறியாமை தோன்றநின் றேனின் றளவில் அவிழ்ந்து நிற்க
அறியாமை யிற்பெறு பேறிழந் தேனினி யாகினு நான்
அறியாமை தீர அருள்ஞான சம்பந்த ஆரமுதே. 3

கருணைக ரன்புக ழாகரன் எங்கள் கமலேயில்வாழ்
திருஞான சம்பந்த தேசிகன் சொற்படி சென்றுநிற்க
ஒருநாள் நிகழ்ந்தது சொல்லவற் ருேனின் றுயிர்ப்பறவே
தருகாய மின்றியோர் ஆனந்தம் எங்குந் தலேப்பட்டதே. 4

உ

குருபாதம்

# சிவயோக சாரம்

## 1. அடிகள் வணக்கம்

சித்தி தருநாதன் தென்கமலை வாழ்நாதன்
பத்தி தருநாதன் பரநாதன்—முத்திப்
பெருநாதன் ஞானப் பிரகாசன் உண்மை
தருநாதன் நம்குருநா தன். 1

அருவும் உருவும் அருவுருவும் அல்லா
ஒருவ னுயிர்க்குயிரா யோங்கித்—திருவார்
கமலைவரு ஞானப்ர காசனென வந்தே
அமலபதந் தந்தெனையாண் டான். 2

ஆரறிவார் நீதிவழி யாரறிவார் சித்திமுத்தி
ஆரறிவார் நற்றவங்கள் அன்பனைத்தும்—பாரெவர்க்கும்
கத்தன் கமலையில்வாழ் ஞானப்ர காசனெனும்
அத்தனென்போல் வந்திலனு ஞல். 3

அரியயற்கு முன்னுள் அடிமுடியுங் காணுப்
பெரியவனே வந்து பிறந்து—துரியம்
பெருக்கின்ருன் ஞானப் பிரகாச னுகி
இருக்கின்ரு ஞரூரில் இன்று. 4

கண்டேனிப் பாசங் கழிந்தேன் அமுதைமுகந்
துண்டேன் சுகானந்தத் துள்ளிருந்தேன்—வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலைச் செங்கமலப் பொற்பாத
ஞானப்ர காசனையே நான். 5

உள்ளிருந்தே யென்று முணர்த்துகினும் கண்டிலரென்(று)
உள்ளும் புறம்புமா வோமென்று—மெள்ள
நரருருவாய் ஆரூரில் வந்தான் நமையாண்
டருள்புரிஞா னப்பிரகா சன். 6

இருளுதய நீக்கும் இரவியைப்போல் என்னுள்
அருளுதய நன்ரு யருளி—மருளுதய
மாற்றியவன் ஆரூரன் மாமறையும் ஆகமமுஞ்
சாற்றியஞா னப்பிரகா சன். 7

ஒழியாத பேரின்பத் துள்ளாய் உலகில்
விழியா திருந்து விடவே—அழியாத
பூரணு! செங்கமலப் பொற்பாதா! தென்கமலை
ஆரணு! நாயேற் கருள். 8

தேடுந் திரவியமும் சிற்றறிவும் பற்றுதலும்
கூடும்பொய் என்றருளிற் கூட்டினுன்—நாடரிய
ஞானப்ர காசனுயர் நற்கமலை மாநகர்வாழ்
வானப் பிறையணிந்த மன். 9

காண்பதும்பொய் கேட்பதும்பொய் காரியம்போ
[லேயித்மாய்ப்
பூண்பதும்பொய் எவ்விடத்தும் போகமும்பொய்
[—மாண்பாகத்
தோற்றியின்ப வெள்ளமாய்த் துன்னிஎன்னுட் சம்பந்தன்
வீற்றிருப்ப தொன்றுமே மெய். 10

## 2. பெறுதற் கருமை

ஒருமையுடன் ஈசனருள் ஓங்கிஎன்றுந் தூங்கல்
அருமை அருமை அருமை—பெருமை இடும்(பு)
ஆங்காரங் கோபம் அபிமானம் ஆசைவினை
நீங்காத போதுதா னே. 11

தன்பெருமை யெண்ணுமை தற்போத மேயிறத்தல்
மின்பெருமை யாஞ்சகத்தை வேண்டாமை—தன்பால்
உடலைத் தினம்பழித்தல் ஓங்குசிவத் தொன்றல்
நடலைப் பிறப்பொழியு நாள். 12

உரையிறந்தால் உன்னும் உணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை—வரைபெருக
வாசிப் பதும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாப்
பூசிப்ப தும்சுத்தப் பொய். 13

பரம ரகசியத்தைப் பாழான வாயால்
இரவுபகல் எந்நேர மின்றிக்—குரல்நெரியக்
கூப்பிட்டுங் காணுமோ கோழைமட நெஞ்சேமால்
பூப்பிட்டுங் காணுப் பொருள். 14

ஒருகோடி ஆகமங்கள் எல்லாம் உணர்ந்தும்
பெருகுதவம் சித்தியெல்லாம் பெற்றும்—குருவருளால்
வைத்த படியிருக்க மாட்டாத மாந்தர்க்குச்
சித்தாசல னம்மாந் தினம். 15

அன்புமிக உண்டாய் அதிலே விவேகமுண்டாய்த்
துன்ப வினையைத் துடைப்பதுண்டாய்—இன்பம்
தரும்பூ ரணத்துக்கே தாகமுண்டாய் ஓடி
வருங்கா ரணர்க்குண்மை வை. 16

## 3. அறியும் பகுதி

உருவை அருவை ஒளியை வெளியை
இருளைச் சிவமென் றிராதே—மருளைப்
பிறிந்தறிவிற் கண்டதனைப் பின்னமற எங்குஞ்
செறிந்தபொருள் தானே சிவம். 17

அகமாதி கண்ட அறிவாகி எங்குஞ்
சுகமாகி இன்ப சுகமாய்ச்—சுகாதீதத்
தானந்த வெள்ள மதுவாய்ச் சுகத்தைஅகன்
ருனந்தம் ஆதியிலா தான். 18

இந்தனத்தில் அங்கி எரிஉறுநீர் தேனிரதங்
கந்தமலர்ப் போதுவான் காலொ்ளிகண்—சந்ததமும்
அத்துவித மாவதுபோல் ஆன்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கும் முறை. 19

ஆருறு தத்துவமும் ஆணவமும் நீங்கிஉயிர்
வேருக நின்றஇடஞ் சொல்லின்—மாரு
இருளாய பாவனையற் றெங்குமாய் நின்ற
பொருளேகாண் நீயே புணர். 20

நனவாதி அந்தத்தில் நாடுசுகந் தன்னைக்
கனவாதி அந்தத்தில் கண்டு—நனவாதி
தோற்றிடும்போ தந்தச் சுகரூபங் கண்டவர்கள்
மாற்றிடுவர் என்றும் மலம். 21

தத்துவங்கள் எண்ணித் தலையடித்துக் கொள்ளாதே
தத்துவங்கள் ஏதென்னின் சாற்றக்கேள்—மெத்துஞ்
சுகாரம்ப மாஞ்சிவத்தில் தோயாத மாயா
விகாரங்கள் தத்துவமா மே. 22

ஆருறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
நீருக முத்திநிலை நிற்போர்க்குப்—பேருகப்
பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியின் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ தும். 23

## 4. உபதேச விளக்கம்

பரவிமனம் போகாப் பரத்தடைய நாளும்
இரவுபகல் அற்ற இடத்தே—திரமாக
நில்என்ருன் கண்டஎல்லாம் நேதிபண்ணி மும்மலமும்
கொல்என்ருன் ஞான குரு. 24

காயம் கரணமுதல் நான்கிற்குங் காரணந்தான்
ஆயஇருள் மாயை அதுஎன்ருல்—தூயபொருட்
போதனே ! செங்கமலப் பொற்பாத னே !எனைநீ
ஏதென்று சொல்லாய் இனி. 25

என்னை அறிவென்றான் என்அறிவில் ஆனந்தந்
தன்னைச் சிவமென்றான் சந்ததமும்—என்னைஉன்னைப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம். 26

எங்கும் இருக்கும் அறிவுநீ ஏகமாய்
அங்கங் குணர்த்தும் அறிவுநாம்—பொங்கு
மலமறைத்தல் மாயை மயக்கல் விகாரப்
பலமனைத்தும் கன்மமலம் பார். 27

செங்கமலப் பொற்பாதன் சீர்பாத வல்லவங்கள்
நங்கமலை வாழ்கிளியே! நாடிக்கேள்—சங்கையிலாத்
தத்துவத்தைக் காட்டியதன் தத்துவத்தைக் காட்டிஅருள்
தத்துவத்தைக் காட்டியது தான். 28

தேசு செறிகமலைச் செங்கமலப்பொற்பாதன்
பேசுதமிழ் ஞானப் பிரகாசன்—பாசவினை
வாட்டினான் மீட்டுநான் வாரா வகையருளைக்
காட்டினான் கூட்டினான் காண். 29

நானிங்காய் நீயிங்காய் நாட்டமற வைத்ததற்பின்
நானெங்கே நீயெங்கே நாதனே!—வானெங்கும்
ஒன்றாகி நின்ற உணர்வுநீ உன்னறிவில்
நன்றாகத் தோன்றுசுகம் நாம். 30

அலைவற் றிருந்த அறிவுநீ ஆங்கே
நிலைபெற் றிருந்தசுக ஞேயம்—மலைவற்
றிருந்ததுகண் டாயே இருந்தபடி அத்தோ(டு)
இருந்துவிடப் போதும் இனி. 31

அகத்தை இழந்தருள்ளாய் அவ்விடத்தே தோன்றுஞ்
சுகத்தில் அழுந்திவிடச் சொன்ஞன்—மகத்தான
சிற்பரஞ ரூர்தனில்வாழ் செங்கமலப் பொற்பாத
தற்பரஞா னப்பிரகா சன். 32

கிட்டாத ஈசனுனைக் கிட்டி அருள்புரிந்த
நிட்டாநு பூதி நிலையிலே—முட்டா
திருவன்னி சேர்ந்துமாற் றேறியபொன் போல
வரும்இன்ப பூரணமா வை. 33

அநாதிசுக ரூபி அரனடிக்கீழ் என்றும்
அநாதி சுகரூபி ஆன்மா—அநாதி
இருந்தமலம் போக்கி இறைஅருளி ஞலே
இருந்தபடி யேகண் டிரு. 34

இற்றை வரைக்கர ணத்தோ டிணங்கினையே
இற்றைவரைச் சென்மம் எடுத்தனையே—இற்றைவரைத்
துன்பவெள்ளத் துள்ளே துளைந்தனையே யீதறநல்
இன்பவெள்ளத் துள்ளே இரு. 35

தேகாதி நானல்ல என்றறிந்தால் சித்தமயல்
போகாத தென்னையோ புண்ணியா—தேகாதி
தன்னளவே அம்மயக்கம் சத்தியமாய் எப்பொழுதும்
உன்னளவே இல்லை உணர். 36

ஆருறு தத்துவநீ அன்றென் றறிந்தனையே
ஆருறும் கண்டறிவன் ஆயினையே—மாருமல்
உன்னறிவில் ஆனந்தத் தோங்கினையே ஓராமல்
நின்னறிவை விட்டதுவாய் நில். 37

மாதா பிதாச்சுற்றம் என்று மயங்கினையே
நீதான் தனுவாகி நின்றனையே—ஈதெல்லாம்
பொய்யென் றறிந்தனையே பூரணா னந்தவெள்ளம்
மெய்யென் றறிந்தனையே மெய். 38

மனையில்வரு போகத்தின் மாதர்மக்கள் பாச
வினையில் அழுந்தி விடாதே—உனை இழந்து
காணமற் கண்டானைக் காட்சி யறக்கலந்து
பூணமல் எப்பொழுதும் பூண். 39

சுத்தவத்தை நாடியிடுஞ் சுத்த இராப்பகலா
மெத்தவத்தை நாடி விடுவையேல்—சுத்தவத்தை
தானய் இரண்டுந் தவிர்ந்த சிவானந்த
வானவை நீயே மதி. 40

சுத்தநிலம் உன்றனக்குச் சொல்லக்கேள் தொல்லைவினைத்
தத்துவங்கள் ஆருறுந் தாம்பெருகக்—கத்திடுவர்
எல்லாம் இழந்த இடமே அதுவாக
நில்லாய் அதுவே நிலை. 41

நெருப்பென்ருல் வாய்சுடுமோ நெய்பால்தேன் கட்டி
கருப்பென்ருல் தித்தியா காணீ—விருப்பமுடன்
நீபிரமம் என்றக்கால் நீபிரமம் ஆயினையோ
நீபிரமம் சற்குருவால் நில். 42

ஆர்க்குந் தெரியாத ஆனந்த இன்பவெள்ளம்
மேற்கொண்டு கொண்டு விடுகுதில்லை—யார்க்கும்
தெரியாப் பரப்பிரமஞ் சேர்த்தாய் உனக்குச்
சரியார் சிதம்பரநா தா. 43

## 5, அநுபூதி நிலை

உள்ளங் கரைய உடல்கரைய ஆனந்த
வெள்ளங் கரைபுரண்டு மேலாகக்—கள்ளமலம்
பொய்யாக என்னுட் புகுந்தவா றென்கோலோ
ஐயா தியாகவினே தா. 44

ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும்—மாதேவா
நின்செயலே என்று நினதருளா லேஉணரின்
என்செயலே காண்கிலே னே. 45

மாயைமலம் எங்கே மறைந்ததோ! மாயைதனில்
ஆயசகம் எங்கே அழிந்ததோ!—காயமதில்
தங்கும் புருடனெங்கோ! சச்சிதா னந்தவெள்ளம்
எங்கு மிகக்கோத்த தே. 46

நானுஞ் சுகவடிவாய் நண்ணினேன் நின்னருளால்
வானுஞ் சுகவடிவாய் மன்னிற்றே—வானுஞ்
சுகரூப மன்றுமணந் தோற்றநிலம் போலுன்
அகரூப மட்டே அது. 47

ஈசன் அடியில் இருக்கையிலே எங்கெங்கும்
ஈசனடி தேடி இளைத்தேனே—பேசரிய
பொற்பதத்தன் செங்கமலப் பொற்பாதன் றன்னுடைய
நற்பதத்தைக் காணுமுன் நான். 48

நற்பதஞ்சேர் ஆரூரின் ஞானப்ர காசனெந்தை
தற்பரனோர் ஞானவாள் தந்தானே—சொற்புனத்தும்
காரார் மறலிஅயன் கண்ணனுக்கும் அஞ்சேனே
யாராலும் என்செய்ய லாம். 49

வெறும்பாழிற் பேரின்ப வெட்டவெளி தன்னில்
குறும்பாளர் காணுக் குடிலின்—உறும்பாசம்
ஓட்டிஎனை வைத்தனனே உற்றபிர பஞ்சமெலாம்
ஆட்டியனூ னப்பிரகா சன். 50

என்றுஞ் சிவத்தோ டிணைபிரியா தேயறிவாய்
நின்றபடி தன்னை நிகழ்த்திஞன்—மன்றில்
நடமாடும் ஆரூரன் ஞானப்ர காசன்
திடமாக என்னுள்ளத் தில். 51

நாதனுர் தென்கமலை நாயனுர் எவ்வுயிர்க்கும்
போதனுர் செங்கமலப் பொற்பாதர்—பேதமற
ஒன்றிரண்டு தானறவே உண்மையிலே கூட்டிஎனை
இன்றறவே வைத்துவிட்டா ரே. 52

நன்னெஞ்சே நீகேட்ட நன்மையெலாஞ் சொல்லுதற்குக்
கன்னெஞ்ச மாலயனுங் காணுதோன்—வன்னெஞ்சர்
இன்னகுறை உண்டென்னு ஈசன் எதிர்வந்தால்
என்னகுறை சொல்லாய் இனி. 53

இட்டசனம் எங்கே இதமகிதந் தானெங்கே
துட்டசனம் எங்கே தொழிலெங்கே—சிட்டருடன்
கூடி யிருந்ததெங்கே குன்ருச் சிவானந்தம்
நாடியது வாயிருந்த நாள். 54

வாக்குமனக் காயத்தான் வந்தபொருள் அத்தனையும்
வாக்குமனக் காயமுடன் மாயுமே—வாக்குமனக்
காயம் உடனிழந்து காணுஞா திருஞான
ஞேயம் இழந்த நிலை. 55

புசிப்போம் சிவபோகம் பூரணமாய் எங்கும்
வசிப்போம் உலகில் வசியோம்—முசிப்பின்றி
வாழ்வோஞ் சிவத்தையுணர் மாதவர்தம் பொன்னடிக்கீழ்த்
தாழ்வோம் எமக்கார் சரி. 56

## 6. உபாய நிலே

அறிவுநீ என்ன அறிந்தறிந்து மாயைச்
செறிவுநான் என்றென்று சேர்ந்தால்—அறிவு
தெரிந்திடுமோ இன்பசுகஞ் சேர்ந்திடுமோ நின்னைப்
பிரிந்திடுமோ சென்மப் பிணி. 57

அரணங்கள் தாம்எரித்த அத்தரே என்னுள்
கரணங்கள் ஓட்டும்வகை காட்டீர்—கரணங்கள்
நீஅதுவாய் நில்லாமல் நின்னறிவைக் கண்டருளிற்
போயதுவாய் நின்றுவிடப் போம். 58

தானல்லா தத்தனையுந் தானென் றுழலாமல்
தானெல்லா மாயதனுள் தாக்காமல்—தானெல்லாம்
ஆனேம் எனும்போதந் தாக்காமல் ஈசனிடத்(து)
ஆனேனே ஆயினவ னும். 59

தேகநாம் என்றென்று செப்புவீர் ஈதில்வரும்
போகநாம் என்று புலம்புவீர்—நோக
வருந்துவீர் தீவினையின் மாருத இன்பம்
பொருந்துவீர் எப்படிநீர் போய். 60

தன்னை இழந்திடத்தே தானே சுகவடிவாய்
இன்னபடி என்றறியா எங்கோனுட்—பின்னமற
நின்றநிலை தானுந் தெரியாதே நின்றவர்கட்(கு)
அன்றே பிறப்பறுக்க லாம். 61

உன்ருதே பற்று துரையாதே யொன்றிஅதில்
நின்ருமம் இல்லை நிகழாதே—பன்ருட்
பரையிறந்து நிற்கும் பயனணைந்தார் நெஞ்சில்
திரையிறந்து நிற்கும் சிவம். 62

அருளறிந்து தானும் அறிவறிந்தே ஆங்குட்
பொருளறிந்து தானடங்கிப் போத—இருளகல
விம்மா திருந்து விகற்பமற ஒன்ருகிச்
சும்மா இருக்கை சுகம். 63

செறியுந் தனுவாதி சேர்ந்தறிந்து நின்ற
அறிவை அறிவால் அறிந்தே—அறிவிழந்து
நின்ருல் சுகானந்த நீடு நிலைவேறு
சென்ருல் சுகங்கிடையா தே. 64

தத்துவத்தை விட்டருளிற் ருன்கலந்து தன்னிழப்பின்
மெத்துஞ் சுகத்தின் மிகஅழுந்திச்—சுத்தமாய்
ஒன்ருகி நின்ற உணர்வும் ஒழிந்தக்கால்
அன்ருே சிவபோக மாம். 65

சுட்டறிவு கெட்ட சுகாதீத உண்மையிலே
விட்டகலா தென்றும் விரவுவோர்—இட்டமுடன்
யோக சமாதிகளும் உட்புறம்பாம் பூசைகளும்
ஆக நினையார் அவர். 66

நின்னறிவில் யானொளித்து நீயாகி நின்றதுபோல்
என்னறிவில் நீ யொளித்தே யானுகி—எந்நாளும்
நிற்கவல்லை யாமாகில் நின்சனனம் போக்குதற்குக்
கற்கவல்ல தேதுமில்லை காண். 67

இன்பசுகத் துள்ளே இருக்கலாம் எப்போதும்
துன்பவினை உன்னைத் தொடராது—வன்பா
மருட்டேக மாயடங்கி மாயாமல் நெஞ்சே
அருட்டேக மாயடங்கு வாய். 68

தேக மறந்து திருவருளாய் நின்றுசிவ
போகம் விளையப் புணர்நெஞ்சே—நோக
வருந்தாமல் தீவினையின் வாடாமல் துன்பம்
அருந்தாமல் நீ பிறவா மல். 69

பூதாதி பாசமன்றோ பூரணா னந்தமன்றோ
பேதமற நம்முட் பிரானன்றோ—வாதனைகள்
விட்டால் சுகமன்றோ என்றுணர்வில் வேண்டுவதுங்
கெட்டால் பிறப்பும் கெடும். 70

அழுந்தாதே பாசத் தனுதினமும் ஐயோ
விழுந்தால் எழுந்திருக்க வேண்டும்—செழும்பாகை
மீறித் தருமிரத வீட்டின்ப மாமலைமேல்
ஏறித் திரும்பலா மே. 71

என்றுஞ் சனனத் திடர்க்கடலி லேழுழ்கிப்
பொன்றுமன மேஉனக்கோர் புத்திகேள்—நன்று
தனிச்சங்கஞ் சேராமல் தற்பரனைச் சேரில்
இனிச்சங்கஞ் சேரா திரு. 72

## 7. பணியறுத்தல்

அவரவருக் குள்ளபடி ஈசனரு ளாலே
அவரவரைக் கொண்டியற்று மானல்—அவரவரை
நல்லார்பொல் லாரென்று நாடுவதென்? நெஞ்சமே
எல்லாம் சிவன்செயலென் றெண். 73

எங்கே நடத்துமோ எங்கே கிடத்துமோ
எங்கே இருத்துமோ என்றறியேன்—கங்கைமதி
சூடினன் தில்லையிலே தொந்தொமென நின்றுநடம்
ஆடினன் எங்கோன் அருள். 74

போகம் புவனம் பொருந்துமிடம் எங்கெங்கும்
தேகம் கரணந் திரியுமே—யாகிலது
தன்னைநீ யென்று தவியாதே நெஞ்சமே
நின்னையே கண்டருளில் நில். 75

ஏதேது செய்திடினும் ஏதேது பேசிடினும்
ஏதேது சிந்தித் திருந்திடினும்—மாதேவன்
காட்டிடுவ தானவருட் கண்ணைவிட்டு நீங்காது
நாட்டம் அதுவாய் நட. 76

எடுத்தஉடற் கேய்ந்தகன்மம் எப்போதும் ஊட்டும்
விடுத்துவிட்டோம் என்பர் விழலர்—விடுத்த
ததுவன்றே ஐந்துமலம் ஆறும் நீத்த
இதுவன்றோ யாம்துறவென் பேம். 77

எவ்வுயிருங் காக்கவோர் ஈசனுண்டோ இல்லையோ
அவ்வுயிரில் நாமொருவர் அல்லவோ—வவ்விப்
பொருகுவதும் நெஞ்சே புழுங்குவதும் வேண்டாம்
வருகுவதும் தானே வரும். 78

முப்பதுஞ்சென் றால்விடியும் முப்பதுஞ்சென் றாலிருளும்
அப்படியே யேதும் அறிநெஞ்சே—எப்போதும்
ஆங்காலம் எவ்வினையும் ஆகும் அதுதொலைந்து
போங்காலம் எவ்வினையும் போம். 79

ஆவலுற்றி டுஞ்சகலத் தாவதுவும் ஆங்கவரே
கேவலத்தின் மூழ்கிக் கிடப்பதுவும்—நா அரற்றல்
இல்லாத சுத்தத் திருப்பதுவும் இம்மூன்றும்
இல்லான் செயலென் றிரு. 80

பாசஞ் சடம்உயிரோ தானுகப் பற்றறியா(து)
ஈசன் இரண்டும் இணைத்தாட்டிப்—பூசலென்றுஞ்
செய்பவனே தானே திரும்பிஅருள் செய்யாமல்
உய்பவர்கள் உண்டோ உரை. 81

முற்றின்ப மாம்அருளின் மூழ்குவதும் மோகமிகு
சிற்றின்ப மாமருளிற் சேர்குவதும்—உற்றிங்(கு)
அறிந்தானன் நெஞ்சே அகிலாண்ட மெங்குஞ்
செறிந்தான் செயலே தெளி. 82

என்னிடத்தில் நின்செயலே இல்லையென்றால் யாதுறினும்
நின்னிடத்தில் யான்வேண்டல் நிச்சயமே—என்னிடத்தில்
இன்மை உயிர்க்குயிர்நீ யின்மை இருந்தியற்றின்
நன்மைதின்மைக் கேதுவோ நான். 83

நாம்பெரியம் என்னுமதை நாடா தடக்குமவர்
தாம்பெரியர் என்றுமறை சாற்றியிடும்—நாம்பெரியர்
என்பார் சிறியர் இவரலா திவ்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல். 84

கட்டமாங் காயம் கலையனைத்தும் கற்றாலும்
அட்டமா சித்தி அடைந்தாலும்—இட்டம்
பரம சுகமே பதியாத போது
திரம சுகமே தெளி. 85

மனவாக்குக் காயமுயிர் மன்னியசைப் பானும்
அனமாதி போகமளிப் பானும்—நனவாதி
கூட்டிவிடு வானுமுத்தி கூட்டிடுவா னும்பிறப்பில்
ஆட்டிவிடு வானும் அரன். 86

முன்னைவினைக் கீடா முதல்வன் அருள்நமைக்கொண்(டு)
என்னவினை செய்ப இயற்றுமோ—இன்னவினை
செய்வோம் தவிர்வோம் திரிவோம் இருப்போம் இங்(கு)
உய்வோம் எனும்வகையேது. 87

ஊட்டும் வினையிருந்தால் உன்னுனை உன்பதத்தைப்
பூட்டிப் பிடித்துப் புசிப்பிக்கும்—கேட்டுத்
திரியாதே வந்துதில்லைத் தெய்வமே என்றென்(று)
எரியாதே நெஞ்சே இரு. 88

என்னதன்று நின்செயலே என்றறிந்தால் யான்விரும்பி
என்னவென்று வாய்திறப்பேன் ஈசனே—இன்னமின்னம்
எப்படியோ நாயேனை ஈடேற்ற வேண்டுமுனக்(கு)
அப்படியே செய்தருளு வாய். 89

வன்மைபுரி காய மரப்பாவை தன்னைஅரன்
கன்மமெனுஞ் சூத்திரத்தால் கட்டியே—நன்மைதின்மை
ஆட்டுவது நாடா தறிவிலார் தஞ்செயலாய்
நாட்டுதல்போல் உண்டோ நகை. 90

ஆருறு தத்துவமும் ஆணவமும் நீங்கிஉயிர்
பேருக ஆனந்தம் பெற்றாலும்—வேருகப்
பார்த்திருப்ப தன்றியே பாழான கன்மத்தை
நீத்திருக்க லாமோ நிலத்து. 91

ஆனசுக துக்கத் தழுந்துகினும் ஞானிகள்தாம்
யானெனதென் றெண்ணி இயைந்திடினும்—தானதற்கு
வேறென் றருளால் விரளமாய்க் காணிலென்றும்
ஏறுமோ கன்மம் இலே. 92

சத்துருவும் மித்துருவும் தாரணியில் வேறில்லே
சத்துருவும் மித்துருவும் தன்னெஞ்சே—பெத்தமலம்
வீட்டும் படிக்கு விணக்கீ டிணத்தனுவோ(டு)
ஆட்டுஞ் சிவனென் றறி. 93

இன்னவினை இன்னதலத் தின்னபொழு தின்னபடி
இன்னதனுல் எய்தும் எனஅறிந்தே—அன்னவினை
அன்னதலத் தன்னபொழு தன்னபடி அன்னதனுல்
பின்னமறக் கூட்டும் பிரான். 94

அன்றே அநாதி அமைத்தபடி யல்லாதொன்(று)
இன்றே புதிதாய் இயையுமோ—என்றுஞ்
சலியா தியற்றுவான் தன்னேயே நோக்கி
மெலியா திருந்து விடு. 95

ஆர்பெரியர் ஆர்சிறியர் ஆர்உறவர் ஆர்பகைஞர்
சீர்பெரியர் ஆனந்த சிற்சொருபர்—பேர்பெரியர்
எங்கெங்குந் தாமாய் இருந்துசட சித்தனைத்தும்
அங்கங் கியற்றுவதா ஞல். 96

நன்கருத்தே தென்கமலே ஞானப்ர காசனே
என்கருத்தே உன்கருத்தென் றெண்ணுமல்—உன்கருத்தே
என்கருத்தென் றெண்ணியே யான்பட்ட துன்பமெல்லாம்
உன்கருத்தே தீரவறி யும். 97

அமைத்தவினைக் கீடா அனுதினமுஞ் செய்வ(து)
இமைப்பொழுதும் வீண்செயலொன் றில்லை—உமைக்குரி
எல்லாம் அறிந்தெங் கியற்றுவதும் தன்னடிமை [யான்
வல்லார் தமக்குணர்த்து வான். 98

கள்ள அரனே கருணையுடன் என்னறிவில்
உள்ளசுகந் தந்துவிட ஒண்ணுதோ—மெள்ள
வருத்துவதும் தீவினையில் வாட்டுவதும் ஞானம்
பொருத்துவதும் ஏன்தான் புகல். 99

கேளா தெனைமலத்திற் கிட்டியெடுத் தாளாக்கி
மீளா தளித்தபர வீட்டிலெனை—யாள
உனக்குப் பொறியோ உனைத்தொடர்ந்தா ளென்ன
எனக்குப் பொறியோ இனி. 100

சும்மா தனுவருமோ சும்மா பிணிவருமோ
சும்மா வருமோ சுகதுக்கம்—நம்மால்முன்
செய்தவினைக் கீடாச் சிவனருள்செய் விப்பதென்றால்
எய்தவனை நாடி இரு. 101

பொல்லாத தீவினையிற் போகார்கள் போனாலும்
எல்லாஞ் சிவன்செயலே என்றிருப்பர்—நல்லார்கள்
நற்றுங் கமலையில்வாழ் ஞானப்ர காசனருள்
சற்றும் பிரியா தவர். 102

கூட்டுவதும் கூட்டிப் பிரிப்பதுவும் ஒன்றொன்றை
ஆட்டுவதும் ஆட்டி அடக்குவதும்—காட்டுவதும்
காட்டி மறைப்பதுவும் கண்ணுதலோன் முன்னமைத்த
ஏட்டின் படியென் றிரு. 103

உள்ளதுதான் போமோமற் றில்லா ததுவருமோ
பள்ளமே வெள்ளம் பரவாதோ—கள்ளமாய்ப்
பித்துப்போ லேபிதற்றும் பேதைமட நெஞ்சமே
செத்துப்போ ஞனே சிவன். 104

ஈசன் பலகீனன் என்றக்கால் ஆலயத்தில்
மோசம் வந்ததென்று மொழியலாம்—ஈசனே
ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவும் தானுனல்
நோக்குவதென் ! யாம்பிறரை நொந்து. 05

தேசம் சிவாலயங்கள் சேர வலேயஒரு
மோசம் வந்ததையோ முதல்வனே—தேசத்து
மன்னைவெறுப் பேனே வருவினையை ஊட்டுவிக்கும்
என்னைவெறுப் பேனே உரை. 106

## 8. துறவின் பகுதி

துரத்தி உன்னை ஆசை தொடராமல் என்றும்
விரத்தியினுல் ஆங்கவற்றை விட்டுப்—பரத்திலன்பு
செய்யடா செய்யடா சேரப்ர பஞ்சமெல்லாம்
பொய்யடா பொய்யடா பொய். 107

அனைத்துலகு நம்பால் அநுக்கிரகம் பெற்றென்
அனைத்துலகு நம்வசமாய் ஆயென்? அனைத்துலகும்
கொண்டாடில் என்னைவினைக் கொத்தறுத்துப் பேரின்பம்
கண்டாடில் அன்றோ கதி. 108

அறிவிழந்து நின்றசுக ஆனந்தத் துள்ளே
குறிபிழந்து நின்று குலாவிப்—பிறியா(து)
இருந்தால் பிறப்பறுமோ ? விச்சைமால் கொண்டு
திரிந்தால் பிறப்பறுமோ ? செப்பு. 109

எத்திசையும் எவ்வுலகும் எத்தொழிலும் எப்பயனும்
நித்தியமென் றெண்ணில் நிலையாதே—புத்தியினல்
கண்ணாடி யில்தோன்றி மாய்ந்துவிடுங் காண்இவற்றைக்
கண்ணாடி யிற்கனவிற் காண். 110

எத்தனைதான் கற்றாலும் எத்தனைதான் கேட்டாலும்
எத்தனைசா தித்தாலும் இன்புரு—சித்தமே
மெய்யாகத் தோன்றி விடும்உலக வாழ்வனைத்தும்
பொய்யாகத் தோன்றாதே போது. 111

மின்போலத் தோன்றி விடும்உலக வாழ்வனைத்தும்
என்போ லிகள்திரமென் றெண்ணுவார்—தன்போதம்
இல்லார் சிவபோகம் என்றும் அருந்தியிடு
நல்லார் திரம்இதுவென் ஞர். 112

தேசமூர் பேர்காணி சீர்வரிசை சாதியெனும்
ஆசையால் நெஞ்சே அலையாதே—நேசப்
பொருப்பானை நின்னறிவிற் போக்கு வரவற்(று)
இருப்பானைப் பார்த்தே இரு. 113

ஆகம் பகையாவ தன்றிப் பகையுண்டோ
மோகந் தவிர்ந்த முனிவோர்க்கிங்(கு)—ஏகன்
இருவர் அறியாத ஈசனருள் அல்லால்
ஒருவர்துணை உண்டோ உரை. 114

அளவிலாச் செல்வத் தடைந்தாலும் ஆகத்
தளவிலாச் சித்திகளுண் டாயும்—அளவில்கலை
ஆய்ந்தாலும் என்னைசுக ரல்லார் சிவானந்தந்
தோய்ந்தார்கள் அன்றே சுகர். 115

